ஓம்

தத்ஸத்

# வச்சிரசூசிகை யுபநிடதம்

மூலமும் - உரையும்

இஃது

வேதமொழி பெயர்ப்பாசிரியர்

காசிவாசி - உயர்திரு. சிவாநந்த யதீந்திர சுவாமிகளால்

தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு

சென்னை அகத்திய குருகுலம்

சாது நாராயண தேசிகர் மடாலயம்

உயர்திரு சுவாமி அருணகிரி நாதரவர்களால்

சென்னை

'மீனாட்சி' அச்சுக்கூடத்தில் அச்சிடபட்டு

வெளியிடப்பட்டது

1934

காபிரைட்] ஸ்ரீமுக தைத் திங்கள் [விலை அணா 1.

22-A

ஓம்

தத்ஸத்

# வச்சிரசூசிகை யுபநிடதம்

மூலமும் - உரையும்




இஃது

வேதமொழி பெயர்ப்பாசிரியர்

காசிவாசி - உயர்திரு. சிவாநந்த யதீந்திர சுவாமிகளால்

தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு

சென்னை அகத்திய குருகுலம்

சாது நாராயண தேசிகர் மடாலயம்

உயர்திரு சுவாமி அருணகிரி நாதரவர்களால்

சென்னை

'மீனாட்சி' அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டு

வெளியிடப்பட்டது

1934

காபிரைட்] ஸ்ரீமுக தைத் திங்கள் [விலை அணா 1.

# உரிமையுரை

—:(‡):—

உலகனைத்திற்கு மோர் ஒப்பற்ற முழுமுதற் கடவுள் உண்டென்பது சமய கோடிகளுக்கெலாம் ஒப்ப முடிந்த தாமாயினும், அகிலாண்ட கோடி யெல்லாந் தன்பாலிருத்தி முத்தொழிற் செய்து தழைத்தோங்கும் அத் திருவருளைப் பெற்றுயர்ந்த முனிவர் சித்தர் முதலியோர்களே கால நோக்கி கருணை மிகுதியால் மன்னுயிர்கட்கு இன்னுணர்வளித்து நன்னெறி யடைவித்து பேரின்பம் பெற்று பெருவாழ்வு வாழ்கச் செய்தவர்கள் என்பது துணிபாம்.

அவர்களுட் சிறந்தார் அகத்தியர் முனிவர் முதலிய எழுவர் அவருள்ளும் மிக்க மேம்பட்டார் அகத்திய முனிவரே யென்பது யாவரு மறிந்த விடயம்.

மற்றும் நமது தமிழ் நாட்டில், வைத்தியர், கணிதர், இரசவாதியர், தந்திர மந்திர நூலார் முதல் மற்றுமுள்ள தொழிலாளர் யாவரும் அகத்திய முனிவரையே தெய்வ மெனக் கொண்டாடுவதுந் தெளிந்த தொன்றும்.

அகத்தியர் என்னுந் திருப் பெயரோ அகம் என்னும் விந்தியமலையை யடக்கினவர் என்னும் பொருள் கொண்டு நிற்பதன்றி எவர்க்கும் யாண்டும். எதற்கும், அகத்தியமாய் அவசியமாய்க் கொள்ளற் பாலார் என்பது இரண்ட பொருள். இவரே பொதிகையில் வாழும் தவநிதியார் என்பதும், தண் தமிழுக்கோர் தாயானவரு மென்ப.

இத்தன்மைய அகத்திய முனிவரின் திருவருளைப்பெற்று துறவென்பது ஆரியக் கொள்கைபோல் வேடத்திலும்,

மனப் பாடத்திலும், சீடர்கள் போற்றும் ஆடம்பரத்திலும் உண்மையாயில்லை யென்பதை உலகிற் குணர்த்துமாறு மனத் துறவு பூண்டு தமிழ் மாபுதழுவி நன்னெறி யொழுகி ஆசிரிய ராய் அநுபவாநந்த தீபிகை முதலிய நூல்களியற்றி, அவ் வகத்திய முனிவரின் திருப்பெயரிட்டு, அகத்திய குரு குல மென்று. ஒன்றை நிறுவிய பண்டைக்காலத்திய பெரியா ரின் மாபு இதுவேயென உணர்த்துவதுமன்றி நமது தமிழ் நாட்டிலுள்ள ஆசிரம முதலியவைகளும் இது போன்றே பண்டைக்காலத்திய முனிவர் சித்தர்களின் பெயரால் நிறுவி அவர்கள் கொள்கையை மேற்கொண்டு ஒழுகிவரல் வேண்டு மென்பதற்கோர் அறிகுறியா யிருக்கின்றது.

மற்றும், அவ்வகத்திய குருகுலத்திலுள்ள உயர் திரு. ஞாநாநந்த மணவாள மாமுனிவர் போன்றும், அவர்களின் சீடர், சுவாமி அருணகிரி நாதர் போன்றும் முக்காரணங் களாலும் எல்லா அடியவர்களும், அறிஞர்களும் பொது நலத்திற் குழைத்து வருவார்களேல் நமது தமிழ் நாடு பண் டைக்காலத்திலிருந்த வாங்கே. தமிழ் மணம் வீசவும், அருள்மண மோங்கவும், திருமணந் தேங்கவும் பெருமணம் பெற்று தழைத்தோங்கு மென்று திருவருளை வேண்டுவ் துடன் இந்த வச்சிரசூசிகை யுபநிடதத்தைத் தமிழில் மொழி பெயர்த்து.

அகத்திய குரு குல நாராயண தேசிகர் மடாலயத்திற்கு அர்ப்பித்தேன்.

இங்ஙனம்,

வேதமொழி பெயர்ப்பாசிரியர்

காசிவாசி

சிவானந்தயதீந்திர சுவாமிகள்

॥ ॐ ॥

# वज्रसूचिकोपनिषत् ।

ॐ आप्यायन्तु ममाङ्गानि वाक् प्राणश्चक्षुः श्रोत्रमथो बलमिन्द्रियाणि च ॥ सर्वाणि सर्वं ब्रह्मोपनिषदं माहं ब्रह्म निराकुर्यां मा मा ब्रह्म निराकरोदनिराकरणमस्त्वनिराकरणमस्तु तदात्मनि निरते य उपनिषत्सु धर्मास्ते मयि सन्तु ते मयि सन्तु ॥ ॐ शान्तिः । शान्तिः । शान्तिः ॥

**यज्ज्ञानाद्यान्ति मुनयो ब्राह्मण्यं परमाद्भुतम् ।**
**तत्रैतत्ब्रह्मतत्त्वमहमस्मीति चिन्तये ॥**
**चित्सदानन्दरूपाय सर्वधीवृत्तिसाक्षिणे ।**
**नमो वेदान्तवेद्याय ब्रह्मणेऽनन्तरूपिणे ॥**

**ॐ वज्रसूचीं प्रवक्ष्यामि शास्त्रमज्ञान भेदनम् ।**
**दूषणं ज्ञानहीनानां भूषणं ज्ञानचक्षुषाम् ॥ १ ॥**

ब्रह्मक्षत्रियवैश्यशूद्रा इति चत्वारो वर्णास्तेषां वर्णानां ब्राह्मण एव प्रधान इति वेदवचनानुरूपं स्मृतिभिरप्युक्तम् । तत्र चोद्यमस्ति को वा ब्राह्मणो नाम किं जीवः किं देहः किं जातिः किं ज्ञानम् किं कर्म किं धार्मिक इति ॥

तत्र प्रथमो जीवो ब्राह्मण इति चेत्तन्न । अतीतानागतानेकदेहानां जीवस्यैकरूपत्वात् एकस्यापि कर्मवशादनेकदेहसंभवात् सर्वशरीराणां जीवस्यैकरूपत्वाच्च । तस्मान्न जीवो ब्राह्मण इति ।

तर्हि देहो ब्राह्मण इति चेत्तन्न । आचाण्डालादिपर्यन्तानां मनुष्याणां पाञ्चभौतिकत्वेन देहस्यैकरूपत्वाज्जरामरण धर्माद्धर्मादिसाम्यदर्शनाद्ब्राह्मणः श्वेतवर्णः क्षत्रियो रक्तवर्णो वैश्यः पीतवर्णः शूद्रः कृष्णवर्ण इति नियमाभावात् । पित्रादिशरीरदहने पुत्रादीनां ब्रह्महत्यादिदोषसंभवाच्च तस्मान्न देहो ब्राह्मण इति ॥

तर्हि जातिर्ब्राह्मण इति चेत्तन्न । तत्र जात्यन्तरजन्तुष्वनेक जातिसंभवा महर्षयो बहवः सन्ति । ऋष्यशृङ्गो मृग्याः कौशिकः कुशात्, जाम्बूको जम्बूकात्, वाल्मीको वल्मीकात्, व्यासः कैवर्तकन्यकायाम्, शशपृष्ठात् गौतमः, वसिष्ठ उर्वश्याम्, अगस्त्यः कलशे जात इति श्रुतत्वात् । एतेषां जात्या विनाप्यग्रे ज्ञानप्रतिपादिता ऋषयो बहवः सन्ति । तस्मान्न जातिर्ब्राह्मण इति ॥

तर्हि ज्ञानं ब्राह्मण इति चेत्तन्न । क्षत्रियादयोऽपि परमार्थदर्शिनोऽभिज्ञा बहवः सन्ति । तस्मान्न ज्ञानं ब्राह्मण इति ॥

तर्हि कर्म ब्राह्मण इति चेत्तन्न । सर्वेषां प्राणिनां प्रारब्धसंचितागामिकर्मसाधर्म्यदर्शनात्कर्माभिप्रेरिताः सन्तो जनाः क्रियाः कुर्वन्तीति । तस्मान्न कर्म ब्राह्मण इति ॥

तर्हि धार्मिको ब्राह्मण इति चेत्तन्न । क्षत्रियादयो हिरण्यदातारो बहवः सन्ति । तस्मान्न धार्मिको ब्राह्मण इति ॥

तर्हि को वा ब्राह्मणो नाम । यः कश्चिदात्मानमद्वितीयं जातिगुणक्रियाहीनं षडूर्मिषड्भावेत्यादिसर्वदोषरहितं सत्यज्ञानानन्दानन्तस्वरूपं स्वयं निर्विकल्पमशेषकल्पनाधारमशेषभूतान्तर्यामित्वेन वर्तमानमन्तर्बहिश्चाकाशवदनुस्यूतमखण्डानन्दस्वभावमप्रमेयमनुभवैकवेद्यमपरोक्षतया भासमानं करतलामलकवत्साक्षादपरोक्षीकृत्य कृतार्थतया कामरागादिदोषरहितः शमदमादिसंपन्नो भावमात्सर्यतृष्णाशामोहादिरहितो दंभाहंकारादिभिरसंस्पृष्टचेता वर्तत एवमुक्तलक्षणो यः स एव ब्राह्मण इति श्रुतिस्मृति पुराणेतिहासानामभिप्रायः ॥

अन्यथा हि ब्राह्मणत्वसिद्धिर्नास्त्येव, सच्चिदानन्दमात्मानमद्वितीयं ब्रह्म भावयेदात्मानं सच्चिदानन्दं ब्रह्म भावयेदित्युपनिषत् ॥

ॐ शान्तिः । शान्तिः । शान्तिः ॥

---

ஓம் :

தத் ஸத்

# வச்சிர சூசிகை யுபநிடதம்

## மூலமும் உரையும்

### சாந்தி

ஓம். ஆப்யாயந்து மமாங்காநி வாக் ப்ராணஸ் சட்சு: ச்ரோத்திர மதோ பலமிந் த்ரியாணிச, சர்வாணி சர்வம் ப்ரஹ்மோபநிஷதம் மாஹம் ப்ரஹ்ம நிராகுர்யாம் மாமா ப்ரஹ்மநிராகரோத் அநிராகரணமஸ்து அநிராகரணமஸ்து ததாத்மநி நிரதே ய உபநிஷத்சு தர்மாஸ் தே மயி சந்து தே மயிசந்து.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

ஓம். எனது அங்கங்களைப் பாதுகாப்பாற்றுக. வாக்கு பிராணன் சுரோத்திரம் மற்றும் ஆற்றலுள்ள இந்திரியங்கள் அனைத்தையும், சர்வம் பிரம உபநிடதம், பிரமத்தை யான் விலக்கேன் பிரமம் என்னைத் தள்ளிவிடற்க. விலக்காமையுளதாக, விலக்காமை யுளதாக, அவ்வான்மாவி லொருப்பட்ட உபநிடதங்களிலுள்ள தருமங்களவையோ அவை என்பால் உளதாக அவை என்பால் உளதாக.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

# வச்சிர சூசிகை யுபநிடதம்

## மூலமும் உரையும்



யக்ஞாநாத் யாந்தி முநயோ ப்ராஹ்மண்யம் பரமாத்புதம்
தத்ரைபத ப்ரஹ்ம தத்வ மஹமஸ்மீதி சிந்தயே.

எழின்மிகு முனிவர் முன்பு வெறுதையுளத்துணர்தலாலே
அழிவறு வியப்புவாய்ந்த வந்தணத்தன்மை யெய்ந்தார்
ஒழிவறிப் பிரமந்தன்னை யொழிவிலா திலங்குமாயை
இழிதா யானென்றுன்னி யிதயத்திலிருத்தி வாழ்வாம்.

சித் சதானந்த ரூபாய சர்வதீ வ்ருத்திசாக்ஷிணே
நமோ வேதாந்த வேத்யாய ப்ரஹ்மணே அநந்தரூபிணே

உளதொளி யினியதென்னு முருவம தாகிமற்றுங்
கிளர்மதி விருத்திகட்குக் கிலமறு சாட்சியாகி
அளவறு மறையின்சென்னி யறிந்திடப் பொருந்தி யென்றும்
வளர்தரு மனந்தமென்னும் பிரமத்தை வணங்குவாமால்.



## உபநிடதத் தொடக்கம்

### மந்திரம்

ஓம் வஜ்ர சூசிம் ப்ரவக்ஷ்யாமி சஸ்த்ர மஞ்ஞான பேதனம்
தூஷணம் ஞானஹீநாநாம் பூஷணம் ஞானசக்ஷுஷாம்.

A No: 18198



### பதவுரை

| | |
|---|---|
| ஞானசக்ஷுஷாம் | ஞானக்கண் ணுடையாருக்கு |
| பூஷணம் | துதியும் |
| ஞானஹீநாநாம் | ஞானக்கண்ணிலாருக்கு |
| தூஷணம் | பழிப்பும் |
| அஞ்ஞானபேதனம் சஸ்த்ரம் | அஞ்ஞானத்தை யழிக்கும் [ஆயுதமுமாகிய |
| வஜ்ரசூசிம் | வச்சிரசூசிகை யுபநிடதத்தை |
| ப்ரவக்ஷ்யாமி | இனிது கூறுகின்றேன். |

### பொழிப்புரை

மெய்ஞ்ஞானக் கண்ணுடையாருக்கு அலங்காரமாகவும், உண்மையறிவாகிய கண்ணில்லாதவருக்குப் பழிப்பாயும், அஞ்ஞானத்தை யறுக்கின்ற வாளாகவும் உள்ள வச்சிரசூசிகை யென்னும் உபநிடதத்தை நன்கு சொல்கின்றேன். (1)

உ

ப்ரஹ்ம க்ஷத்ரிய வைஸ்ய சூத்ரா இதி சத்வாரோ
வர்ணா: தேஷாம் வர்ணாநாம் ப்ராஹ்மண ஏவ
ப்ரதான இதி வேதவசநாநுரூபம் ஸ்ம்ருதிபி ரப்யுக்தம்

### பதவுரை

| | |
|---|---|
| ப்ரஹ்ம | பிராமணன் (அந்தணன்) |
| க்ஷத்ரிய | க்ஷத்திரியன் (அரசன்) |
| வைஸ்ய | வைசியன் (வணிகன்) |
| சூத்ரா | சூத்திரன் |
| இதிசத்வாரோ வர்ணா: | என நான்கு சாதியர் உளர் |
| தேஷாம் வர்ணாநாம் | அச்சாதியார்களுள் |

| | |
|---|---|
| ப்ராஹ்மண ஏவ | பிராமணனே |
| ப்ரதான இதி | முக்கியனென்று |
| வேத வசநாநுரூபம் | வேத வாக்கைப் போன்று |
| ஸ்ம்ருதிபி: அப்யுக்தம் | ஸ்மிருதிகளாலுங் கூறப்பட்டிருக்கின்றது. |

பொழிப்புரை

பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என நான்கு வருணத்தவர்க ளிருக்கின்றனர் அவர்களுள் பிராமணனே சிறந்தவன் என வேதங் கூறுவது போல ஸ்மிருதிகளுங் கூறுகின்றன என்பதாம்.

௩

தத்ர சோத்ய மஸ்தி, கோவா ப்ராஹ்மணோ
நாம? கிம் ஜீவ:? கிம் தேஹ:? கிம் சாதி:?
கிம் ஞானம்? கிம் கர்ம? கிம் தார்மிக? இதி.

பதவுரை

| | |
|---|---|
| தத்ர | அவ்விடயத்தில் |
| சோத்ய மஸ்தி | வினவ வேண்டியதுண்டு |
| கோவா ப்ராஹ்மணோ நாம | பிராமணன் யாவன் ? |
| கிம் ஜீவ:? | சீவனா? |
| கிம் தேஹ:? | உடம்பா? |
| கிம் ஜாதி:? | சாதியா? |
| கிம் ஞானம்? | ஞானமா? |
| கிம் கர்ம? | கருமமா? |
| கிம் தார்மிக: | தருமஞ் செய்பவனா |

பொழிப்புரை

பிராமணனே சிறந்தவன் என்றதில் வினாக்களுண்டு அவை, பிராமணத் தன்மை யென்பது சீவனா? அல்லது

தேகமா? அல்லது சாதியா? அல்லது ஞானமா? அல்லது கருமமா? அல்லது தருமமா? என்பன.

(ங)

தத்ர ப்ரதமோ ஜீவோ ப்ராஹ்மண இதி சேத்தந்ந, அதீதா நாகதாநே கதேஹாநாம் ஜீவஸ்யைகரூபத்வாத் ஏகஸ்யாபி கர்மவசாத் அநேக தேஹ சம்பவாத் சர்வ சரீராணாம் ஜீவஸ்யைகரூபத் வாச்ச தஸ்மாந் ந ஜீவோ ப்ராஹமண இதி.

பதவுரை

| | |
|---|---|
| தத்ர | அவற்றுள் |
| ப்ரதமோ | முதலாவது |
| ஜீ வோ ப்ராஹ்மண: | சீவன் பிராமணன் |
| இதிசேத்தந்ந | என்பது கூடாது |
| அதீதா | போனவைகளும் |
| அநாகத | வருபவைகளுமான |
| அநேக தேஹாநாம் | அநேக தேகங்களில் |
| ஜீவஸ்ய | சீவன் |
| ஏக ரூபத்வாத் | ஒரே வடிவனதலின் |
| கர்ம வசாத் | கரும வசத்தினுல் |
| ஏகஸ்யாபி | ஒரே சீவனுக்கும் |
| அநேக தேஹ | பலவிதமான சரீரங்கள் |
| சம்பவாத் | பொருந்து மாதலின் |
| சர்வ சரீராணாம் | எல்லாச் சரீரங்களிலும் |
| ஜீவஸ்ய | சீவன் |
| ஏக ரூபத்வாச்ச | ஒரே வடிவனதலானும் |
| தஸ்மாத் | ஆகையால் |
| ஜீவோப்ராஹ்மண: | சீவனே பிராமணன் |
| இதி ந | என்பதில்லை. |

பொழிப்புரை

போனவைகளும் வருபவைகளுமான அநேக தேகங்களிலும் சீவன் ஒருவனே யாதலாலும், ஒரே சீவன் கரும வசத்தால் அநேக தேகங்களை யடைதலாலும், தேகங்களெல்லாவற்றிலுமுள்ள சீவன் ஒருவனே யாவனுதலாலும், சீவனே பிராமணன் என்னும் முதற்பட்சம் பொருந்தாது. (4)

௫

தர்ஹி தேஹோ ப்ராஹ்மண இதிசேத். தந்ந. ஆ சண்டாளாதிபர்யந்தாநாம் மநுஷ்யாணும் பாஞ்ச பௌதிகத்வேந தேஹஸ்ய ஏகரூபத்வாத் ஜராமரண தர்மாதர்மாதி சாம்ய தர்சநாத் ப்ராஹ்மண: ஸ்வேதவர்ண: க்ஷத்ரியோ ரக்தவர்ணோ வைஸ்ய: பீதவர்ண: சூத்ர: க்ருஷ்ணவர்ண இதி நியமாபாவாத் பித்ராதி சரீரதஹநே புத்ராதீநாம் ப்ரஹ்மஹத்யாதி தோஷ சம்பவாச்ச தஸ்மாந் ந தேஹோ ப்ராஹ்மண இதி.

பதவுரை

| | |
|---|---|
| தர்ஹி | அங்ஙனமாயின் |
| தேஹோப்ராஹ்மண: | தேகமே பிராமணன் |
| இதிசேத் தந்ந | என்பதுவுமில்லை |
| ஆ சண்டாளாதி பர்யந்தாநாம் மநுஷ்யாணும் | சண்டாளன் முதல் (பிராமணன்) ஈறுன மனிதர்களுக்கும் |
| பாஞ்சபௌதிகத்வேந | பஞ்சபூதங்களின் காரியமாந்தன்மையால் |
| தேஹஸ்ய ஏகரூபத்வாத் | தேகம் ஒருவடிவாதலானும் |
| ஜராமரண | மூப்பிறப்பு |
| தர்மாதர்மாதி | புண்ணியபாவம் முதலியன |
| சாம்யதர்சநாத் | ஒப்பாய்க் காணப்படலானும் |

| | |
|---|---|
| ப்ராஹ்மண: ஸ்வேதவர்ண: | பிராமணன் வெண்மை நிற [முடையவன் |
| க்ஷத்ரியோ ரக்தவர்ண: | க்ஷத்திரியன் சிவப்பு நிற [முடையவன் |
| வைஸ்ய: பீதவர்ண: | வைசியன் மஞ்சள் நிற [முடையவன் |
| சூத்ர: க்ருஷ்ணவர்ண: | சூத்திரன் கறுப்பு நிற [முடையவன் |
| இதி நியமா பாவாத் | என்னும் நியமங் கூடாமை [யானும் |
| பித்ராதி | தந்தை முதலியவர்களின் |
| சரீர தஹநே | உடம்பைச் சுடில் |
| புத்ரா தீநாம் | (அவர்களுடைய) புத்திரன் [முதலியோர்களுக்கு |
| ப்ரஹ்ம ஹத்யாதி | பிராமணனைக் கொல்லல் [முதலான |
| தோஷ சம்பவாச்ச | தோஷம் பொருந்தலானும் |
| தஸ்மாத் | ஆகையால் |
| ந தேஹோ ப்ராஹ்மண இதி, | தேகம் பிராமணன் என் [பதும் பொருந்ாது |

## பொழிப்புரை

சண்டாளன் முதல் பிராமணன்வரை எல்லா மனிதர்களுக்கும் பஞ்சபூதங்களின் காரியமாய் தேகம் ஒரே தன்மையாமாதலானும், மூப்பு, இறப்பு, புண்ணியம், பாவம், முதலியன யாவர்கட்கும் ஒப்பாகவே காணப்படலானும் வெண்மை நிறத்தன் பிராமணன், சிவப்புநிறத்தன் க்ஷத்திரியன், மஞ்சள் நிறமுடையவன் வைசியன், கருநிறத்தன் சூத்திரன் என்னும் நியத மின்மையானும், புத்திரன் முதலானோர், தங்களுடைய பிதா முதலியவர்களின் உடம்பைச் சுடுங்

கால் அவர்களுக்குப் பிராமணனைக் கொல்லுதல் முதலிய தோடம் வருதலானும், தேகம் பிராமணன் என்பதும் பொருந்ாது. (5)

(கூ)

தர் ஹி ஜாதிர் ப்ராஹ்மண இதிசேத்தந்ந தத்ர ஜாத்யந்தர ஜந்துஷ்வநேக ஜாதி சம்பவா மஹர்ஷயோ பஹவ: சந்தி.

பதவுரை

| | |
|---|---|
| தர் ஹி | அவ்வண்ணமாயின் |
| ஜாதிர்ப்ராஹ்மண: | சாதியே பிராமணன் |
| இதி சேத்தந்ந | என்பதும் பொருந்தாது |
| தத்ர | அதில் |
| ஜாத்யந்தர ஜந்துஷு | வேறு சாதியுடைய பிராணி [களிடத்து |
| அநேக ஜாதி சம்பவா: | பலவகைச் சாதியாய்ப் பிறந்த |
| மஹர்ஷய: | மகரிஷிகள் |
| பஹவ: சந்தி | அநேகர் இருக்கின்றார்கள் |

பொழிப்புரை

தேகம் பிராமணன் அன்றெனினும் சாதியே பிராமணனாகாதோவெனின்? அதுவும் பொருந்ாது என்னை? வேறு சாதி யுடைய விலங்குகளிற் பிறந்த பலவகைச் சாதியுடைய மகரிஷிகள் பலர்களிருக்கின்றார்களாதலின். (6)

(கூ)

ரிஷ்யச்ருங்கோ ம்ருக்யா: கௌசிக: குசாத், ஜாம்பூகோ ஜம்புகாத், வால்மீகோ வல்மீகாத்,வ்யாஸ: கைவர்த்த கன்னிய காயாம், சசப்ருஷ்டாத் கௌதம:, வசிஷ்ட உர்வஸ்யாம், அகஸ்த்ய: கலசே ஜாத இதி சுருதத் வாத். (6)

பதவுரை

| | |
|---|---|
| ரிஷ்யச்ருங்க: | கலைக்கோட்டு மஹர்ஷி |
| ம்ருக்யா: | மான் வயிற்றிற் பிறந்தவர் |
| கௌசிக: குசாத் | கௌசிகர் தருப்பையிற் பிறந் |
| ஜாம்பூக: | சாம்பூக ரிஷி [தவர் |
| ஜம்பூகாத் | நரியிற் பிறந்தவர் |
| வால்மீக: | வால்மீகி ரிஷி |
| வல்மீகாத் | புற்றிற் பிறந்தவர் |
| வ்யாஸ: | வியாசர் |
| கைவர்த்த கன்னியகாயாம் | மீன் வாணியப் பெண்ணிற் |
| கௌதம: | கௌதம முனிவர் [பிறந்தவர் |
| சசப்ருஷ்டாத் | முயலின் பின் புறத்திற் பிறந் |
| வசிஷ்ட: | வசிஷ்டர் [தவர் |
| உர்வஸ்யாம் | ஊர்வசி தாசியினிடத்திற் பிறந் |
| அகஸ்த்ய: | அகஸ்தியர் [தவர் |
| கலசே ஜாத: | குடத்திற் பிறந்தவர் |
| இதி ஸ்ருதத்வாத் | எனக் கேட்கப் படலால். |

பொழிப்புரை

கலைக்கோட்டுமஹர்ஷி மானிலும், கௌசிகர் தருப்பையிலும், சாம்பூகர் நரியிலும், வால்மீகி புற்றிலும், வியாசர் மீன் புல்லரின் கன்னியினிடத்தும், கௌதமர் முயலின் பின்புறத்திலும், வசிட்டர் ஊர்வசியினிடத்தும் அகத்தியர் குடத்திலும் பிறந்தார், என சாத்திரங்கள் கூறுகின்றன வாகலின் என்பதாம். (6)

(௭)

ஏதேஷாம் ஜாத்யா விநாப் யக்ரே ஞானப்ரதிபாதிதா ரிஷயோ பஹவ: சந்தி தஸ்மாந் ந ஜாதிர் ப்ராஹ்மண இதி.

### பதவுரை

| | |
|---|---|
| ஏதேஷாம் | இவர்களுக்குள் |
| ஜாத்யா விநாபி | சாதி யில்லாமலும் |
| அக்ரே | முன் காலத்தில் |
| ஞானப்ரதிபாதிகா | ஞானிகளெனச் சொல்லப் |
| ரிஷய: | ரிஷிகள் [பட்ட |
| பஹவ: சந்தி | அநேகர் இருக்கின்றார்கள் |
| தஸ்மாத் | ஆகையால் |
| ந ஜாதி: ப்ராஹ்மண இதி | சாதி பிராமணன் அன்று |

### பொழிப்புரை

இவர்களை, சாதி யில்லாமலே முன்னர் தத்துவஞானிகளென சாத்திரங்களிற் கூறப்பட்டிருத்தலின் சாதியே பிராமணன் என்பதுங் கூடாது. (6)

தர்ஹி ஞானம் ப்ராஹ்மண இதிசேத் தந் ந க்ஷத்ரியாதயோபி பரமார்த்த தர்சின: அபிஞ்ஞா பஹவ: சந்தி தஸ்மாந் ந ஞானம் ப்ராஹ்மண இதி.

### பதவுரை

| | |
|---|---|
| தர்ஹி | அன்றேல் |
| ஞானம் ப்ராஹ்மண: | ஞானமே பிராமணன் |
| இதி சேத் | என்னி லோ |
| தந் ந | அதுவு மன்று |
| க்ஷத்ரியாதயோபி | க்ஷத்திரியன்முதலியவர்களும் |
| பரமார்த்த தர்சின: | பரம்பொருளையுணர்ந்த |
| அபிஞ்ஞா: | தத்துவஞானிகள் |
| பஹவ:சந்தி | அநேகரிருக்கின்றார்கள் |
| தஸ்மாத் | ஆகையால் |
| ந ஞானம் ப்ராஹ்மண இதி, | ஞானம் பிராமணன் அன்று |

பொழிப்புரை

அஃதின்றேல் ஞானமே பிராமணன் என்பதும் பொருந்தாது என்னை? பரம் பொருளையுணர்ந்து தத்துவஞானிகளாய் அநேக க்ஷத்திரியர்களு மிருக்கின்றார்களாதலின் என்பதாம். (7)

(அ)

தர் ஹி கர்ம ப்ராஹ்மண இதி சேத் தந். ந. சர்வேஷாம் ப்ராணிநாம் ப்ராரப்த சஞ்சிதாகாமி கர்ம சாதர்ம்ய தர்சனாத். கர்மாபி:ப்ரேரிதா: சந்தோ ஜநா: க்ரியா: குர்வந்தீதி தஸ்மாந் ந கர்ம ப்ராஹ்மண இதி.

பதவுரை

| | |
|---|---|
| தர் ஹி | ஆனால் |
| கர்ம ப்ராஹ்மண: | கருமமே பிராமணன் |
| இதி சேத்தந் ந | என்னிலோ, அதுவுமன்று |
| சர்வேஷாம் ப்ராணிநாம் | எல்லாப் பிராணிகளுக்கும் |
| ப்ராரப்த சஞ்சிதாகாமி | பிராரத்தம். சஞ்சிதம் ஆகாமியம் என்னும் |
| கர்ம சாதர்ம்ய தர்சனாத் | கருமங்கள் சமமாகக் காணப்படுதலானும் |
| கர்மாபி: | கருமங்களால் |
| அபிப்ரேரிதா: சந்த: | செலுத்தப் பட்டவர்களாய் |
| ஜநா: | சனங்கள் |
| க்ரியா: குர்வந்தி | தொழில்களைச் செய்கின்றார்கள் |
| இதி தஸ்மாத் | என்னு மக் காரணத்தாலும் |
| ந கர்ம ப்ராஹ்மண இதி | கருமம் பிராமணன் என்பதும் பொருந்தாது |

பொழிப்புரை

பிராணிகளனைத்திற்கும் பிராரப்தம் சஞ்சிதம் ஆகாமியம் என்னுங் கருமங்கள் ஒரே தன்மையாய்க் காணப்படுதலானும் சனங்கள் கருமங்களாலேவப்பட்டு தொழில்களைச் செய்கின்றார்களாதலாலும் கருமமே பிராமணனென்பதும் ஒவ்வாது.

(௬)

தர்ஹி தார்மிகோ ப்ராஹ்மண இதிசேத் தந் ந, க்ஷத்ரியாதயோ ஹிரண்யதாதாரோ பஹவ: ஸந்தி
தஸ்மாந் ந தார்மிகோ ப்ராஹ்மண இதி.

பதவுரை

| | |
|---|---|
| தர்ஹி | அற்றேல் |
| தார்மிக: | கருமஞ் செய்வோன் |
| ப்ராஹ்மண இதிசேத் | பிராமணன் என்னிலோ |
| தந் ந | அதுவு மமையாது |
| க்ஷத்ரியாதய: | க்ஷத்திரியன் முதலியோர்கள் |
| ஹிரண்யதாதார: | பொன்தானஞ் செய்கின்றவர்கள் |
| பஹவ: ஸந்தி | அநேகர் இருக்கின்றார்கள் |
| தஸ்மாத் | ஆகையால் |
| தார்மிக: | தர்ம முடையோன் |
| ப்ராஹ்மண. இதி ந | பிராமணனென்பதும்ஒவ்வாது |

பொழிப்புரை

பொன் தானஞ் செய்தல் முதலிய கருமஞ் செய்கின்ற க்ஷத்திரியர் முதலியோர்களும் பலர்களிருக்கின்றார்களாதலின் கருமஞ் செய்கின்றவனே பிராமணன் என்பதும் பொருத்தமன்று. (9)

(ய)

தர்ஹி கோவா ப்ராஹ்மணோ நாம? ய: கச்சித் ஆத்மாந மத்விதீயம் ஜாதி குணக்ரியாஹீநம், ஷடூர்மி ஷட்பாவேத்யாதி சர்வ தோஷ ரஹிதம், சத்ய ஞாநாநந்தானந்த ஸ்வரூபம் ஸ்வயம்நிர்விகல்பம், அசேஷ கல்பநாதாரம், அசேஷ பூதாந்தர்யாமித்வேந வர்தமாநம், அந்தர் பஹிஸ்சாகாசவதநுஸ்யூதம், அகண்டானந்த ஸ்வபாவம், அப்ரமேயம், அநுபவைக வேத்யம். அபரோட்ச தயா பாசமாநம், கரதலாமலகவத் சாட்சாதபரோக்ஷீக்ருத்ய க்ருதார்த்த தயா காம ராகாதி தோஷரஹித: சமதமாதி சம்பந்நோ பாவ மாத்ஸர்ய த்ருஷ்ணாசா மோஹாதி ரஹிதோ தம்பாஹங்காராதிபிரசம்ஸ்ப்ருஷ்ட சேதா வர்ததே ஏவ முக்தலட்சணோ ய: ஸ ஏவ ப்ராஹ்மண இதி, ஸ்ருதி ஸ்ம்ருதி புராணேதிஹாசாநாமபிப்ராய: அந்யதாஹி ப்ராஹ்மணத்வ ஸித்திர் நாஸ்த்யேவ.

பதவுரை

| | |
|---|---|
| தர்ஹி | அஃதின்றேல் |
| கோவா ப்ராஹ்மணோ நாம? | பிராமணன்என்பவன் யாவன்? |
| ய: கஸ்சித் | யாவனொருவன் |
| அத்விதீயம் | அத்துவிதமாயும் |
| ஜாதி குணக்ரியாஹீநம் | சாதி,குணம்,கிரியை அற்றதும் |
| ஷடூர்மி | இன்பதுன்பமுதலிய ஆறலைகள் |
| ஷட்பாவ | பிறப்பு முதலிய அறுவிகாரங் |
| இத்யாதி | இவை முதலிய [கள் |
| சர்வதோஷ ரஹிதம் | தோஷங்களற்றதும் |
| சத்ய ஞானாந்தானந்த ஸ்வரூபம் | சச்சிதானந்த அனந்த வடிவும் |

| | |
|---|---|
| ஸ்வயம் நிர்விகல்பம் | இயல்பாய் விகற்ப மற்றதும் |
| அசேஷ கல்பநாதாரம் | எல்லா ஆரோபத்திற்கும் [அதிட்டானமும் |
| அசேஷ பூதாந்தர் யாமித்வேந | எல்லாப் பூதங்களினுள்ளீ |
| வர்தமாநம் | இருக்கிறதும் [டாய் |
| அந்தர் பஹிஸ்ச | உள்ளும் புறம்பும் |
| ஆகாஸ வத் | ஆகாசத்தைப் போன்று |
| அநுஸ்யூதம் | நிறைந் திருப்பதும் |
| அகண்டா நந்தஸ்வபாவம் | நீக்கமிலாவின்பவியல்பினதும் |
| அப்ரமேயம் | பிரமாணத்தா லறியப்படா [ததும் |
| அநுபவைக வேத்யம் | அநுபவமொன்றினாலேயே [யறியத் தக்கதும் |
| அபரோட்சதயா பாசமாநம் | அபரோட்சமாக விளங்குவது [மாகிய |
| ஆத்மாநம் | ஆன்மாவை |
| கரதலா மலகவத் | உள்ளங்கை நெல்லிக் கனி |
| சாட்சா தபரோட்சிக்ருத்ய | நேரா யுணர்ந்து [போன்று |
| க்ருதார்த்ததயா | செய் பயனடைந்த தன்மை |
| காமராகாதி | காமம் இச்சை முதலிய [யால் |
| தோஷரஹித: | தோஷமின்றியவனும் |
| சமதமாதி சம்பந்ந: | சமதம முதலியவைகளை [யுடையவனும் |
| பாவமாத்ஸர்ய | பொறாமை எண்ணம் |
| த்ருஷ்ணாசா | மூவேடணை இச்சை |
| மோஹாதிரஹித: | மோக முதலியன அற்றவனும் |
| தம்பாஹங்காராதிபி: | இடம்பம் ஆணவ முதலியவை [களுடன் |

| | |
|---|---|
| அசம்ப்ருஷ்டசேதா: | கூடாத மனமுடையவனும் |
| வர்த்தே | இருக்கின்ற |
| ஏவமுக்தலட்சணோ ய: | இவ்விதங் கூறிய இலட்சண [முடையவன் எவனோ |
| ஸ ஏவ | அவனே |
| ப்ராஹ்மண இதி | பிராமணன் என்று |
| ஸ்ருதி ஸ்ம்ருதி | சுருதி மிருதி |
| புராணேதிஹாசானாம் | புராண இதிகாசங்களின் |
| அபிப்ராய: | கருத்து |
| அந்யதாஹி | வேறு வகையாலே |
| ப்ராஹ்மணத்வ சித்தி: | பிராமணத் தன்மை பெறப்படு |
| நாஸ்த்யேவ | இல்லை. [மென்பதே |

பொழிப்புரை

மேற்கூறியவைகள் பிராமணத்தன்மை யன்றாமெனின்? மற்று. பிராமணன் என்பவன் யாவன் எனில்? அத்துவிதமும், சாதி குணக்கிரியை யற்றதும், இன்பதுன்ப முதலிய ஆறலை களற்றதும், பிறப்பு முதலிய ஆறு விகாரங்களின்றியதும், விடயமாந்தன்மை முதலிய தோஷங்கள் அற்றதும் சத்து, சித்து, ஆனந்தம், அனந்தவடிவும், உண்மையாய் விகற்ப மற்றதும், கற்பனையனைத்திற்குமாதாரமும், எல்லாப் பூதங்களில் உள்ளீடாய் இருக்கின்றதும் உள்ளும் புறம்பும் ஆகாசத்தை போன்று நிறைந்திருப்பதும் நீக்கமிலாவின் பவியல் பினதும் பிரமாணத்தாலுணரப்படாததும், அநுபவத்தினாலேயே அறிதற்குரியதும், அபரோட்சமாய் விளங்குவதுமாகிய ஆன்மாவை நேரே உள்ளங்கை நெல்லிக் கனி போலுணர்ந்து செய்தவற்றின் பயன் வந்தமையால் காம முதலிய தோடமற்று, சமதம முதலிய பெற்று வேட்

A No: 18198



கை, பற்று முதலிய வொழிந்து டம்பம் ஆணவமென்பது முதலிய சோாத மனமுடைமை என்னும் இவ்விலக்கணத்தை யுடையவன் எவனோ அவனே பிராமணன் என்பது வேதாகமபுராண இதிகாச முதலிய எல்லா நூல்களின் கருத்து. வேறுவகையால் பிராமணத் தன்மை சித்திக்கவே மாட்டாது.

(கக)

சச்சிதானந்தமாத்மாநம் அத்விதியம் ப்ரஹ்ம பாவயேத் ஆத்மாநம் சச்சிதானந்தம் ப்ரஹ்ம பாவயேத் இத்யுபநிஷத்.

பதவுரை

| | |
|---|---|
| சச்சிதானந்தம் | சச்சிதானந்தமாகிய |
| ஆத்மானம் | ஆன்மாவை |
| அத்விதியம் | அத்துவிதமாகிய |
| ப்ரஹ்ம பாவயேத் | பிரமமாய்ப்பாவிக்கவும் |
| ஆத்மாநம் | ஆன்மாவை |
| சச்சிதானந்தம் | சச்சிதானந்தமாகிய |
| ப்ரஹ்மபாவயேத் | பிரமமாய்ப் பாவிக்கவும் |
| இத் யுபநிஷத் | உபநிடதம் முற்றும் |

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

பொழிப்புரை

உண்மையறிவானந்த வடிவ ஆன்மாவை அத்துவிதப் பிரமமாகப் பாவித்தல் வேண்டும் ஆன்மாவை சச்சிதானந்த பிரமமாகப் பாவித்தல் வேண்டும். இவ்வாறு வச்சிரசூசிகை உபநிடதம் முற்றும்.

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

ஓம்:

அகத்திய குருகுலம்

ஸ்ரீ சாது நாராயண தேசிகர்

# புத்தகசாலை

120, திருவொற்றியூர் ஐரோட்

# புத்தக விளம்பரம்

அனுபவானந்த தீபிகை முதலிரு திருமுறை மூலம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | காலிகோ பைண்டு ... ... | 0 | 12 | 0 |
| ஷை | ராப்பர் பைண்டு ... ... | 0 | 10 | 0 |
| ,, | உரையுடன் அச்சில் யிருக்கின்றன | | | |
| ,, | இரண்டாந் திருமுறை உரையுடன் ... | 1 | 8 | 0 |
| ,, | மூன்றாந் திருமுறை (வசனம்) ... | 0 | 12 | 0 |

இவை ஷை சங்கத்தின் முதலாசிரியரும் சித்தர் சாஸ்திர பாரங்கதரும் வேதாந்த வித்வ சிரோமணியும் சதா பிரம்ப நிஷ்டபாராய் விளங்கியிருந்தவருமான ஸ்ரீ சாது நாராயண தேசிகர் திருவாய் மலர்ந்தருளப்பட்டவை. இவற்றில் முதலிரு திருமுறைகளும் செய்யுள் வடிவமானவை. மூன்றாந் திருமுறை வசன வடிவமானது. இவை வேதாந்தத்தின் பதினான்கு வித்தைகளின் முக்கியக் கருத்தாக விளங்கும் திருஷ்டி சிருஷ்டி வாதத்தை மந்த அதிகாரியும் தெளிந்து உஜ்ஜீவிக்கும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளன. மற்றும் சித்தர் நூல் இதிகாச புராணாதிகளின் உண்மைக் கருத்தை உள்ளவாறு உணராதவர்களுக்கு விளையும் மயக்கங்களை யொழித்து உண்மைக் கருத்தை யுள்ளவாறுரைக்குந் தன்மையுடையவை.

| | | | |
|---|---|---|---|
| புராணேதிகாஸத்துவார்த்த தீபிகை | 0 | 12 | 0 |
| பாலாமிர்தபோதம் வித்தியா வித்தியா சரித்திரம் | 0 | 4 | 0 |
| தேசிகர் திருவந்தாதி | 0 | 2 | 0 |
| குரு சிட்டாசாரம் | 0 | 2 | 0 |
| வச்சிரசூசிகை யுபநிடதம் | 0 | 1 | 0 |

இவை ஷை தேசிகரின் சிஷ்யப்ரசிஷ்யர்களா லியற்றப்பட்டவை இவையே யன்றி சகல வேதாந்த, சித்தாந்த நூல்களும் இலக்கிய இலக்கண நூல்களும் பிறவும் இங்கு கிடைக்கும். தபாற்கூலி பிரத்தியேகம்.